உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிரபந்தத்திரட்டு.

இஃது

அநேகர்வேண்டுகோளின்படி

இராமநாதபுர சமஸ்தான வித்துவான்

இராஜசிங்கமங்கலம் தாலூகா

ஹெட்குமாஸ்தா

**எம். முத்துசாமிபிள்ளையவர்கள்**

இயற்றி

தேவகோட்டை

மீனலோசனி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கலாயிற்று.

சோபகிருது வரு தைமீ

1904

# இந்தப் பிரபந்தத்திரட்டில் அடங்கியவைகள்.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# கருவைப்பதிகம்.

## காப்பு

நேரிசைவெண்பா

சேல்வணைந்தா ரம்மார் செழும்பணைசூ ழுங்கருவைப்
பால்வணநா தன்மேற் பதிகமது—மாலணையான்
சொல்லுதற்கைம் பாணியுள தோன்முகவி நாயகனே
நல்லதர்க்கின் பக்கடலே நாடு.



யமகக்கலித்துறை.

பால்வண்ண மாதொப் பனையாளை வைத்தவ பாகெளவன்
பால்வண்ண மாலை பகர்வோர் பரிபவம் பாற்றியவா
பால்வண் ணலர்த்தண் டலைசூழ் கருவைப் பதிபதியும்
பால்வண்ண நாதப் பரனேயெ னக்கருள் பாலிப்பையே. (க)

மஞ்சுள பன்னியர்க் கேவலை யிட்டவ மையல்செய்கா
மஞ்சுப மாக மகிழ்சிறி யேற்குன் மலரடியே
மஞ்சுகி யென்ன வருள்கவி ஞெப்பனை மாதுபங்கா
மஞ்சுறை நாஞ்சிற் கருவைக் கழாவைகு மாவரனே. (உ

அஞ்சக் கரத்தன் மகவா னிமையவ ரந்தணர்க
ளஞ்சக் கரத்தனும் போகி யுமிழ்ந்த வனற்கடுக்கண்
டஞ்சக் கரத்தலி லாதயின் றேயணி யார்கருவை
யஞ்சக் கரத்துறு பால்வண்ண நாத வருள்புரியே. (ங



உ

சிவமயம்.



கமலத்த னோர்சிரம் போக்கிச் சமண கலத்துரைத்துக்
கமலத்தை வேணிக்க ணிந்தெயில் மூன்றினைக காய்ந்தெரிந
கமலத்தை பின்னவன் காணு துயாந்து கருவையுற்ற
கமலத்தை நீக்கித் தமியனை யாட்கொள்வன் கண்ணுதலே. (௪)

மாதங்க மால்கொளு மார்பன் றனக்கு வளையருள்வோய்
மாதங்க மாமுகற் கின்கனி யீந்தவ மன்னிமய
மாதங்கம் பாதி யுடையா யஞ்ஞான மறுத்தெனையாள்
மாதங்க மாமதில் சூழ்கரு வாபுரி வாழ்பவனே. (௫)

அம்பதி னுளினை யூடுமின் பாலெய் யனங்களுட
லம்பதி யக்கனற் கண்விழித் தோயறு கார்மதலை
யம்பதி வார்சடை யத்தநந் தூர்பணை யார்கருவை
யம்பதி மேவிய பால்வண்ண நாத வருள்புரியே. (௬)

கம்பத்தி னூடரி யாயுதித் துக்கன கற்பிளந்த
கம்பத்தி யில்வெறி யேறரி வீறினைக் காய்ந்தவவாள்
கம்பத்தி னன்புயங் காலுகி ராணெரி கண்ணுதலே
கம்பத் திரமிலை வேணிக் கருவைக் கறைக்கண்டனே. (௭)

கந்துகந் தாளந் தன்மெனு மங்கையர் காமந்துய்த்துக்
கந்துகந் தாகிநந் தாதுனை யேத்தென் கருத்திளைய
கந்துகந் தாருறை யுங்கரு வாபுரிக் கர்த்தவருள்
கந்துகந் தாவுவ னைநட்ட பால்வண்ணக் காரணனே. (௮)

கரியுரி யார்மதி கங்கை கருவைக் கழனிழற்கி
கரியுரி யார்மதி காறி லடியனுக் காய்மடலைக்
கரியுரி யார்மதிக் கக்காட்டி யாள்பவர் காரணிசங்
கரியுரி யார்மதி காண்பர்நெஞ் சுற்றவர்க் காமிநெஞ்சே. (௯)

கண்டங் கரியல் கதையக்குக் கூந்தற் கணிகையரைக்
கண்டங் கரிய மயலுறு வேற்கருள் காமர்மரைக்
கண்டங் கரியனத் தான்றுதிக் குந்தென் கருவைவளர்
கண்டங் கரியவ வொப்பனைபாக கதியருளே. (௰)

கருவைப்பதிகமுற்றிற்று.